கிரகணம் ஆகாமையால் இவரை யான் தீண்டி அழவும் இயலாதவளாகக் கலங்கி நிற்கின்றேன். தாய், தந்தை, உடன் பிறந்தார் முதலிய அனைவரையும் துறந்து, இவரை நம்பிவந்தேன். இவர் என்னை நட்டாற்றில விட்டு நடந்துவிட்டார்; இனி எனக்கு வாழ்வு ஏது? என் முன்வினை மூண்டது போலும்'' என்று கூறி முறையிட்டாள்.

திருஞான சம்பந்தர், அப்பெண்மணியின் துயரைக் கேட்டுப் பெரிதும் கருணைகொண்டார். "அம்மா; அழாதே திருக்கோயிலில் கருணைக்கடலாயுள்ள எம்பெருமான் உன் துயரைக் களைவார். வருந்தற்க'' என்று ஆறுதல் கூறியருளினார்.

அவளை அழைத்துக்கொண்டு திருக்கோயிலுக்குள் சென்றார். 'இறைவனே! ஆலம் உண்ட நீலகண்டப் பெருமானே! நஞ்சரவணிந்த நண்பனே, பாம்பணையில் துயின்ற பரந்தாமனும், விதிவிலக்கு வரையும் வேதனும் போற்றும் வித்தகனே! இவள் உன்னை நாத்தழும்பேற ஏத்தி ஏத்தித் தோத்திரம் புரிகின்றாள். இவள் துயரைக் களைவாய்'' என்று சுவாமியிடம் முறையிட்டார்.

''சடையா யெனுமால் சரணீ யெனுமால்
விடையா யெனுமால் வெருவா விழுமால்
மடையா குவளை மலரு மருகல்
உடையாய் தருமோ இவள் உள் மெலிவே''

என்ற தேவாரப் பாடலைப் பாடியருளினார்.

அந்த அமுதப் பாடல் பாடியவுடன், இறைவன் கருணையால் மாண்ட செட்டிக்குமாரன் உயிர் பெற்று எழுந்தான். அப்போது அல்லல்பட்டழுத அம்மங்கை ஆனந்த வெள்ளத்துள் திளைத்தாள். இருவருக்கும் அக்கணமே திருமணஞ் செய்வித்தார் திருஞானசம்பந்தர்.

இறைவனுடைய கருணையைநாடிய ஞானசம்பந்தர் தானும் கருணையுடையவராகத் திகழ்ந்தார்.

குசேலமுனிவர் வறுமையாகிய சிறுமையில் மூழ்கினவர். அப்படி வறுமைப் பிணி மூடியும் அவருடைய மனம் சதா கண்ணபிரானையே நாடியது. மனைவியின் வேண்டுகோளின் படியே கண்ணனைக் காணப் புறப்பட்டார். அவர் வாழும் அவந்திக்கும் துவாரகைக்கும் நெடுந் தூரம். குடையும் பாதரட்சையும் அவருக்கு ஏது? கடும் வெயில் அக்கினிப் பிழம்பாக ஆதித்தன் காய்கின்றான். மண் சுடுகிறது. குசேலர் இந்த வெயிலில்தான் நடக்கின்றார். அவர் செல்லும் சாலையில் இருபுறங்களிலும் நல்ல நிழல் தரும் மரங்கள் குளிர்ந்த நிழலைத் தந்துகொண்டிருக்கின்றன. குசேல முனிவர் அந்த நிழலில் ஒதுங்கிச் சென்றால் வெயிலின் கொடுமையிராது. ஆனால் அவர் நிழலில் ஒதுங்காமல் நடுச்சாலையில் செல்கின்றார்; கால் சுடுகின்றது, தலைசுடுகின்றது. இரு கரங்களையும் விரித்து தலைக்குமேல் மறைத்துக்கொண்டு, "கண்ணா! கண்ணா! தாங்கமுடியாத வெப்பமாக இருக்கின்றதே. என் செய்வேன்? இன்னும் எத்தனை தூரம் இருக்கின்றதோ?" என்று கூறிக்கொண்டே நடக்கின்றார். அவர் ஏன் நிழலில் ஒதுங்கவில்லை? காரணம் தெரிகின்றதா? ஈக்கள், எறும்புகள், புழுக்கள் முதலிய சிற்றுயிர்கள் கொடிய வெயிலைத் தாங்கமாட்டாது நிழலில் ஒதுங்கி இருக்குமே? நாம் நிழலில் நடந்தால் அச்சிற்றுயிர்கள் இறந்துவிடும் என்று கருதினார். கருணை காரணமாகவே நிழலில் ஒதுங்காமல் வெயிலில் நடந்து துன்புற்றார். இத்தகைய கருணை அவர்பால் இருந்ததனால் கண்ணபிரானுடைய கருணை அவர்பால் சுரந்தது.

"ஓத நீழற்செலில் சிற்றுயிர்த் தொகை
போதசாம்பும் என்றெண்ணிய புந்தியான்
ஆதவன் தமிழ் ஆறு நடத்திடும்
காதல் அங்கை விரித்துக் கவித்தரோ"

—குசேலோபாக்கியானம்

நம் தமிழகத்தில் பிறவுயிர்க்குப் பெரிதும் இரங்கிய திருவாளர்கள் பலர் வாழ்ந்தார்கள்; ஓரறிவுடைய முல்லைக்கொடி தனியே வாடி நிற்பதைக் கண்ட பாரிமன்னன், தன் தேரை நிறுத்தி அதன் மீது கொடியைச் சுற்றி அதற்கு உதவி புரிந்து நடந்து சென்றான்; அவனுடைய கருணை எத்துணை விழுமியது?

ஒரு தலைவன் அயலூர் சென்றிருந்தான். தன் கருமம் முடிந்தது. அவன் இளைஞன்; கருமம் முடிந்ததும் தன் வீட்டிலுள்ள தலைவியை நினைத்தான்; காதல் வெள்ளம் கரைபுரண்டு ஓடியது! தலைவியை நோக்கித் தலைவன் புறப்பட்டான்; மணிகள் பூட்டிய தேரில் வருகின்றான்; வழியில் இருமருங்கிலும் பூச்செடிகள் நிரம்ப மலர்கள் குலுங்குகின்றன. அம்மலரில் வண்டுகள் தம்தம் காதல் நிறைந்த பெண் வண்டுகளுடன் அமர்ந்து தேனைக் குடிக்கின்றன. இதனைக் காண்கின்றான் தலைவன். அவன் உள்ளம் கருணைமயமானது. தேரில் மணிகள் ஒலித்தால் தேன் உண்ணும் வண்டுகள் அஞ்சியகலும்; அவைகட்கு இடையூறுரும் என்று அவனுடைய திருவுள்ளம் எண்ணி உருகியது. தேரை நிறுத்தினான். தேரில் உள்ள ஒவ்வொரு மணிகளின் நாக்குகளையும் அசையாவண்ணம் சிறுசிறு கயிறுகளால் கட்டினான். இப்போது மணியின் நா அசையாது நின்றது—வண்டுகட்கு இடர் விளையாது என்று மன நிறைவுகொண்டான். தேர் ஏறித் தன் காதலியை

நாடிச் சென்ருன். அப்பெருமகனின் கருணையை நினைத்தால் கல் மனமும் கரையுமே!

''பூத்த பொங்கர் துணையோடு
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணி நாவார்த்த மாண் வினைத் தேரன்
உவக்காண் தோன்றும்''

—அகநானூறு

ஆகவே இறைவனுடைய கருணையைப் பெற விழைகின்ற ஒவ்வொருவரும் பிறவுயிர்களிடம் கருணை காட்டவேண்டும். எல்லா உயிர்களிடத்திலும் இறைவனைப் பார்க்கவேண்டும்; எல்லாவுயிர்களும் இறைவனுடைய கோயில்கள்; ஆதலால் இறைவனை எவ்வுயிர்களிலும் கண்டு அவ்வுயிர்கட்கெல்லாம் கருணை செய்தல் வேண்டும்.

அதுவே கடைத்தேறும் வழி.

# கல்வி

கல்வி என்ற சொல்லுக்குத் தோண்டுதல் என்று பொருள். (கல்லுதல்–தோண்டுதல்)' எதனைத் தோண்டுதல்?' என்ற ஒரு வினா எழும். அறியாமையைத் தோண்டுதல் வேண்டும். ஏன்? அறிவு விளக்கமுறும் பொருட்டு.

கல்வி கற்பதனால் அறிவு வளர்கின்றது என்று சிலர் கூறுவார்கள். அது பொருந்தாது. கல்வி கற்பதனால் அறிவு வளர்பதில்லை. அறியாமை தேய்கின்றது. அறியாமை தேயத் தேய அறிவு விளக்கமுறுகின்றது.

அரிசி வெண்மையாகவேண்டும் என்றால் என்ன செய்கின்றோம்? உலக்கையால் தீட்டுகின்றோம்!

சுவர் வெண்மையாக இருக்கவேண்டும் என்றால் சுண்ணாம்பு தீட்டுகின்றோம்; நாற்காலி வெண்மையாக இருக்கவேண்டும் என்றால் வெள்ளைவர்ணம் பூசுகின்றோம். அதுபோல் அரிசி வெண்மையாக வேண்டுமானால் சுண்ணாம்புதீட்டுகின்றோமா? இல்லை; உலக்கையால் குத்துகின்றோம். ஏன்? அரிசியின் இயற்கை வெண்மை. அந்த வெண்மையைத் தவிடு மறைத்திருக்கின்றது. மறைத்துள்ள தவிட்டினை அகற்றினால் அரிசியின் இயற்கை நிறமாகிய வெண்மை தானே

வெளிப்படுகின்றது. இதுபோல் ஆன்மாக்கள் இயல்பாக அறிவுப் பொருள், அந்த அறிவை அறியாமை மறைத்திருக்கின்றது. மறைத்துள்ள அறியாமை நல்ல நூல்களாகிய உலக்கையால் குத்தி அகற்றினால் ஆன்மாவின் சொரூபமாகிய அறிவு வெளிப்படுகின்றது.

அறிவு வடிவம் ஆன்மா, கற்கண்டு இனிமை மயமானது. அதுபோல் ஆன்மா அறிவுமய மானது. அறிவிக்க அறிகின்ற அறிவு.

''பாராதி பூதநீ யல்லை-உன்னிப்
பார் இந்திரியம் காரணநீ யல்லை
ஆராய் உணர்வுநீ என்றான்—ஐயன்
அன்பாய் உரைத்தசொல் ஆனந்தம் தோழி''

என்கின்றார் தாயுமானார்.

மற்றொரு உதாரணங் கூறுகின்றேன். வேட்டி வெண்மையாக இருக்கவேண்டுமென்று நாம் கருதுகின்றோம். அதைச் சுண்ணாம்பு நீரில் நனைப்பதில்லை. உவர் மண் முதலிய சாதனங் களையிட்டுக் கல்லில் தோய்க்கின்றோம். நமது நோக்கம் வேட்டி வெண்மையாக வேண்டும் என்பது; முயற்சி அழுக்கை அகற்றுவது. இதன் கருத்து என்ன? வேட்டியின் இயல்பு வெணமை தானே. அந்த உண்மையை அழுக்கு மறைத் துள்ளது, அழுக்கு அகல அகல வெண்மை வெளிப்படுகின்றது. அதுபோல் ஆன்மாவின் அறிவாகிய வெண்மையை அஞ்ஞானமாகிய அழுக்கு மூடியுள்ளது. அஞ்ஞானம் நீங்கினால் அறிவு தோன்றுகிறது.

இன்னும் ஓர் உவமை கூறுகின்றேன். கண்ணாடிக் கூட்டுக்குள் மின்சார விளக்கு எரி

கின்றது. அந்த பல்பு மேல் தார் பூசப்பட்டுள்ளது. விளக்கின் ஒளி மங்கலாக இருக்கின்றது. ஒளி நன்கு வரவேண்டும் என்று எண்ணிய நாம் என்ன செய்கின்ருேம். ஒளியைத் தடை செய்கின்ற தார் மையைத் துடைக்கத் துடைக்க மின்சார விளக்கின் ஒளி பளிச்சென்று கிடைக்கின்றது. அதுபோல் ஆத்மப் பிரகாசத்தை ஆணவ இருள் மறைத்துள்ளது. ஆன்மா என்று உண்டோ அன்றே ஆணவமலமறைப்பும் உண்டு. செம்பு என்று உண்டோ அன்றே களிம்பும் உண்டு.

செம்பில் உள்ள களிம்பை ரசமணியால் நீக்கித் தங்கமாக்குவது போல ஆன்மாவின் ஆணவமலத்தைக் குருநாதன் ஐந்தெழுத்தாகிய ரசமணியால் நீக்கிச் சீவனைச் சிவனுக்குவர்.

கருடன் உருவங் கருது மளவில்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவங் குறித்த அப்போதே
திரிமலந் தீர்ந்து சிவன் அவனுமே —திருமந்திரம்

கருமருவு குகையனைய காயத்தின் நடுவுள்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டல் இருக்க நீ ஞான அனல் மூட்டியே
கனிவு பெற உள்ளுருக்கிப்
பருவம் தறிந்து நின் அருளான குளிகைகொடு
பரிசித்து வேதி செய்து
பத்துமாற்றுத் தங்க மாக்கியே பணிகொண்ட
பட்சத்தை என் சொல்லுகேன்

—தாயுமானுர்

இந்த மூன்று உவமைகளால் ஆன்மாவின் உண்மைத் தன்மை அறிவு என்றும், அதனை அறியாமை அநாதியே மறைத்துள்ளது என்றும்,

நாம் அறிவு நூல்களால் அறியாமையை அகற்று தல் வேண்டும் என்றும் அறிக.

மணலை எடுக்க நீர் வெளிப்படுகின்றது. நீரை மணல் மறைத்திருக்கின்றது. அங்கு நீர் புதிதாக வரவில்லை. ஆங்கு எப்போதும் இருந்ததுதான். ஆனால், அதை மணல் மறைத்திருந்தது எடுக்கப் பட்டவுடன் நீர் இனிது கிடைக்கின்றது. எத்த னைக்கு எத்தனை மணலை எடுக்கின்றோமோ அத்தனைக்கு அத்தனை நீர் கிடைக்கின்றது. அதுபோல் நூல்களை எத்தனைக்கு எத்தனை பயில் கின்றோமோ அத்தனைக்கு அத்தனை அறியாமை யகன்று அறிவு விளக்கமுறுகின்றது. இக் கருத் தினைத் தெளிவாக நமக்கு உபதேசித்தவர் திருவள்ளுவ தேவர்.

''தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறும் அறிவு.''

செல்வத்தினும் கல்விச் செல்வம் சிறந்தது. ஒருவன் வறியனாக இருந்தான்; பின்னர் பெருஞ் செல்வனாக இருந்தான்; செல்வம் நிலத்தில் விளை பொருளுமன்று; வானத்தினின்றும் பொழிகின்ற பொருளுமன்று. தானியம் விளையும்; தண்ணீர் பொழியப்படும். செல்வம் அத்தகையதன்று. பின்னே அவன் எவ்வாறு தனபதியாக ஆனான்! பலரிடம் இருந்த பொருள் ஒருவன்பால் குவிந்து விட்டது! இதனால் என்ன விளங்குகின்றது? ஒருவன் பெருஞ் செல்வம் படைத்தான் என்றால் பலர் வறியவர்களாக ஆனார்கள் என்று கொள்ள வேண்டும்.

ஒரு பக்கம் மேடு. ஆனால், பல பக்கங்கள் பள்ளமாய் விட்டன என்றுதானே பொருள்; இதில் சிறிதும் ஐயம் இல்லையே; பலர் வறியவர்

களாக ஆனால்தான் ஒருவர் தனவந்தராக ஆக முடியும். திருக்குறள், நாலடியார், தொல்காப்பியம், நன்னூல், பெரிய புராணம், கம்பராமாயணம் முதலிய இனிய நூல்களைப் படித்து ஒருவர் அறிஞராக ஆனார் என்றால் ஐம்பது பேர் மூடர்களாக ஆனார்கள் என்று இல்லையே. பலரை மூடராக்கித்தான் ஒருவன் அறிஞனாகவேண்டும் என்பது இல்லை. கல்வி கற்றலினால் யாருக்கும் ஒரு தீங்கும இன்றி அறிவு நலத்தைப் பெறலாம் என உணர்க.

செல்வம் உடையானுக்குச் சுற்றமும் நண்பரும் சிலர்தான் இருக்க முடியும். கல்விச் செல்வம் உடையானுக்கு எல்லா நாடுகளும், எல்லா ஊர்களும் எல்லா மக்களும் சொந்தமாகிவிடும். அதனால் கல்விச் செல்வத்தை உயிர் உள்ளவரை தேடிக்கொண்டே யிருக்க வேண்டும்.

*'' யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்*
*சாந்துணையுங் கல்லாத வாறு.''* —திருக்குறள்

மாண்டால் வீடு மாடு வாகனம் தனம் தானியம் நிலம் புலம் முதலிய அனைத்தும் உடன் வர மாட்டா. கல்விமட்டும் பிறவி எழுந்தோறும் உடன் வந்து உதவும்.

*ஒருமைக்கண் தான் கற்ற கல்வி ஒருவற்*
*கெழுமையும் ஏமாப் புடைத்து.* —திருக்குறள்

செல்வத்தை வெள்ளங் கொண்டு செல்லும்;

கல்வியை வெள்ளங் கொண்டு செல்லாது.

செல்வப் பொருளை உடன் பிறந்தார் பங்கிட்டுக் கொள்வர்;

கல்விப் பொருளை உடன்பிறந்தார் பங்கு பெறமுடியாது.

செல்வத்துக்கு அரசாங்கத்தில் வரி விதிப்பார்;

கல்விக்கு அரசாங்கத்தார் வரி விதிக்கமாட்டார்கள்.

செல்வம் நெருப்பினுல் கெடும்;

கல்வி நெருப்பிலும் நின்று நலஞ் செய்யும்.

செல்வம் செலவழித்நால் குறையும்;

கல்வி செலவழிக்கச் செலவழிக்க வளர்ந்து கொண்டேயிருக்கும்.

செல்வத்தைக் கள்வர் கவர்ந்து கொள்வார்கள்.

கல்விச் செல்வத்தைக் கள்வர்களால் கவர முடியாது.

செல்வத்தைக் காப்பது அரிது;

கல்வியைக் காப்பது எளிது.

வெள்ளத்தால் போகாது வெந்தணலால் வேந்தராலும்
கொள்ளத்தான் முடியாது கொடுத்தாலும் நிறைவொழியக்
குறைபடாது
கள்ளர்க்கோ மிகவரிது காவலு மிகஎளிது கல்வியென்னும்
உள்ளத்தே பொருளிருக்க உலகெலாம் பொருள்தேடி
உழல்வதேனே?

இனி ஒருவனுக்குச் சிறந்த அழகாக விளங்குவது கல்வி ஒன்றேயாம்;

குஞ்சி யழகும் கொடுந்தானைக் கோட்டழகும்
மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம் யாமென்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே அழகு. —நாலடியார்

இனி கல்வி கற்பவர் கற்கத் தகுந்த நூல்களையே கற்கவேண்டும். கடையில் விற்கின்ற நூல்கள் அனைத்தையும் வாங்கிப் படிக்கக் கூடாது.

ஏன் விற்கத்தகுந்த நூல்களைத்தானே விற்க வேண்டும்? வேண்டாத நூல்களையெல்லாம் ஏன் விற்கின்றார்கள்? என்று கேட்கக்கூடாது.

பலசரக்குக் கடையில் சர்க்கரை, முந்திரிப் பருப்பு, வாதாம்பருப்பு, சேமியா, கோதுமை, ரவை, முதார் சிங்கு, மயில்துத்தம், பருத்திக் கொட்டை, கடலைப் பிண்ணாக்கு, நெய், மண்ணெண்ணெய் எல்லாம் விற்பனைக்கு உள்ளன. மயில் துத்தம், முதார் சிங்கு, பிண்ணாக்கு, மண்ணெண்ணெய் எல்லாவற்றையும் சமரசமாக வாங்கிப் பாயசஞ் செய்தால் எப்படியிருக்கும்? அதனை யார் குடிப்பார்கள்? அதுபோல் விற்பனைக்கு வைத்துள்ள அத்தனை நூல்களையும் வாங்கிப் படிக்கக் கூடாது.

இந்தக் கருத்தைச் சுருக்கமாகக் கூறினார் திருவள்ளுவர்.

"கற்க; கசடற; கற்பவை"

"கற்கத்தக்க நூல்களைக் கற்க. கற்றபின் அதன்படி நிற்க" என்றார்.

மக்கள் எத்தனையோ பிழைகள் செய்கின்றார்கள்; கொலை புலை களவு சூது பொய் என்பனவாகப் பல பிழைகள். இவற்றுள் தலையாய பிழை கற்கத்தக்க அறிவு நூல்களைக் கல்லாமையேயாகும்.

பிழைகளைக் குறித்துப் பாடவந்த பட்டினத்துச் சுவாமிகள் 'சிறப்புடைப் பொருளைமுந்துறக் கிளத்தல்' என்ற சூத்திரப்படி கல்லாப்பிழை என்று முதலில் கூறிப் பாடுகின்றார்.

*கல்லாப் பிழையும் கருதாப்பிழையுங் கசிந்துருகி*
*நில்லாப் பிழையும் நினையாப் பிழையும்நின் அஞ்செழுத்தைச்*
*சொல்லாப் பிழையும் துதியாப் பிழையும் தொழாப் பிழையும்*
*எல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியே கம்பனே*

"அறிவு நூல் கல்லா மூடர்" என்று கூறுகின்றார் அருணகிரிநாதர்.

கல்வியின் பயன் அறிவு.

அறிவின் பயன், அறிவு வடிவான இறைவனையடைதல். ஆதலால் கல்வியின் பெரும் பயன் கடவுளையடைதலே யாகும்.

*''கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்*
*நற்றாள் தொழாஅர் எனின்''*

என்று திருவள்ளுவதேவர் திட்ட வட்டமாகக் கூறிவிட்டார்.

இதே கருத்தைச் சேக்கிழார் பெருமான் கூறும் அழகையும் காண்க.

*''உள்ள நிறைக் கலைத்துறைகள் ஒழிவின்றிப் பயின்றவற்றால்*
*தெள்ளிவடித் தறிந்த பொருள் சிவன் கழலில் செறிவு''*

பஞ்சினால் ஆகிய ஒன்றுக்கும் நூல் என்று பேர். அறிவைத் தருகின்ற சுவடிகட்கும் நூல் என்று பேர். இரண்டுக்கும் நூல் என்ற ஒரே பேர் வர என்ன காரணம்? நூலைத் தட்டி மரக்கோணலை மாற்றுவர். அதுபோல் அறிவு நூலைத் தட்டி மனக்கோணலை மாற்றவேண்டும். நூல் தட்டிய

மரம் வர்ணந் தடவி நிழலில் கட்டிடத்துக்குள் இருக்கும். நூல் தட்டாத மரம் வெய்யிலில் காய்ந்து, மழையில் நனைந்து அடுப்பில் எரிந் தொழியும், அதுபோல் அறிவு நூல் கற்றுர் போற்றப்பெறுவர்; கல்லாதார் தூற்றப் பெறுவர்.

எனவே மக்கள் அறிவு நூல்களைக் கற்று,; அறியாமையை அகற்றி அறிவு விளக்கம் பெற்று, அதனுல் உள்ளந்திருந்தி, இறையன்பு தலைப் பட்டுத் திருவருளுக்கு உரியராக விளங்கி, என்றும் குன்றுத இன்பத்தை எய்தி உய்வுபெறு வார்களாக.

# நடுங்கும்

சிலர் யானையைக் கண்டு நடுங்குகின்றார்கள்; சிலர் புலியைக் கண்டு நடுங்குகின்றார்கள்; சிலர் சிங்கத்தைக் கண்டு நடுங்குகின்றார்கள்.

ஆனால் வேட்டையாடும் வீரர்கள் புலி, கரடி சிங்கம், யானை இவைகளைக் கண்டு நடுங்காதும் ஒடுங்காதும் எதிர்த்து, வாளாலும் வேலாலும் கொன்று வெற்றி மாலை புனைகின்றார்கள்.

''தறிசெறி களிறும் அஞ்சேன்
தழல்விழி உழுவை யஞ்சேன்''
(உழுவை—புலி.)

என்று வீர கர்ஜனை புரிகின்றார் மாணிக்கவாசகர்.

சிலர் பாம்பைக் கண்டு நடுங்குகின்றார்கள். ''பாம்பென்றால் படையும் நடுங்கும்'' என்பது பழமொழி.

ஜோகிபிடாரன் எத்துணை கொடிய பாம்பு களையும் பிடித்துத் தன் விருப்பத்துக்கு ஏற்ப ஆட்டுகின்றான். மந்திர சித்தி பெற்றவர்கள் நாகங்களைக் கண்டால் நடுங்குவதில்லை; விஷ ராஜா என்ற பேருடன் விளங்கும் ஒருவர் (அம்மன்குடி) எத்துணைக்கொடிய விஷத்தையும் மாற்றி விடுகின்றார். பழநியில் நீலகண்ட மந்தி

ரம் தெரிந்த ஒரு குடும்பத்தார் கொடிய நல்ல பாம்புகளைக் கண்டால் புடலங்காய்களை எடுப்பது போல நடுக்கமின்றி எடுத்துக் கொள்ளுகின்ருர்கள்.

''புற்றில்வாள் அரவும் அஞ்சேன்'' என்று வீர வசனம் புகல்கின்ருர் வாதவூரடிகள். சிலர் வறுமையைக் கண்டு மிகமிக நடுங்குகின்ருர்கள். ''கொடிது கொடிது வறுமை கொடிது'' என்கின்ருர்கள்.

ஆனுல், உயர்ந்த திருவருள் ஞானிகள் வறுமையை வரவேற்கின்ருர்கள்.

''இறைவனே! வெண்ணீறுபுனைந்த மெய்யடியார்கட்குச் சதா விருந்து செய்து வருகின்ற வறுமையையும், விரதமிருந்து இளைக்கின்ற உடம்பையும், எனக்குக் கொடு'' என்று வறுமையை வரமாகக் கேட்கின்ருர் சிவப்பிரகாசர்.

> ''வெண்டிருநீறு புனை யுமாதவர்க்கும்
> விருந்து செய்துறு பெருமிடியும்
> கொண்டநல் விரதத்து இளைத்த யாக்கையும் இக்
> கொடியனேற் கருளுநாள் உளதோ?''

சிலர் நோயைக் கண்டு நடுங்குகின்ருர்கள். ''பிணியெலாம் வரினும் அஞ்சேன்'' என்று இயம்புகின்ருர் மாணிக்கவாசக சுவாமிகள்.

சிலர் இயமனைக் கண்டு நடுங்குகின்ருர்கள்; ஆனுல் தவநெறி நின்ற சிவஞானிகளுக்கு இயமன் ஒரு சுண்டெலியாகக் காட்சி தருகின்ருன்.

> ''கோணிலா வாளும் அஞ்சேன்
> கூற்றுவன் சீற்றம் அஞ்சேன்''

—திருவாசகம்

> ''நமனை அஞ்சோம்''

—அப்பர்

சிலர் பிறப்புக்கும் இறப்புக்கும் நடுங்கு கின்றார்கள்; அருள் பழுத்த அருந்தவ சீலர்கள் போற்றும்மாணிக்கவாசகர், "பிறப்பினோடிறப்பும் அஞ்சேன்" என்று கூறுகின்றார்.

எனவே யானைக்கும் புலிக்கும் சிங்கத்திற்கும் அரவுக்கும், வறுமைக்கும் பிணிக்கும், நமனுக்கும் பிறப்புக்கும் இறப்புக்கும். எரிக்கும் இடிக்கும் மலைக்கும் நடுங்காத ஞானிகள், சிலரைக் கண்டு நடுங்குகின்றார்கள்.

ஒன்றுக்கும் நடுங்காத ஞானிகள் யாரைக் கண்டு நடுங்குகின்றார்? அவர்கள் என்ன எமனை விட வல்லமையுடையவர்களா? வேலும் வாளுந் தாங்கிய வீரர்களா? என்ற கேள்வி எழும்.

மரணம் இன்றி வாழ்வதற்கு அமிர்தம் வேண்டும் என்று வானவர்கள் கருதினார்கள். அமிர்தம் வேண்டும் என்று விரும்பி வானவர்கள் சிவபெருமானை வேண்டியிருந்தால் ஒரு விநாடி யில் அமிர்தத்தை அப்பெருமான் வழங்கி யிருப்பார்.

தேவர்கள் தான்தோன்றிகளாகத் தாமே சென்று பாற்கடலைப் பலகாலும் கடைந்தார்கள். இமையவர்கள் எதிர்பார்த்தது அமிர்தம்; திருப் பாற்கடலில் திடீர் எனத் தோன்றியது ஆலகால விஷம்; ஆ! ஆ! மிகப்பெரும் பயங்கரமான விஷம்; உலகங்களையெல்லாம் இது நடுங்க வைத்தது. வானவர் தானவர் மாணவர் சித்தர் முத்தர் பித்தர் கின்னரர் கிம்புருடர் மண் விண் கதிர் மதி முதலிய எல்லாம் நடுங்கின. அதன் வெப்பத்துக்கு ஆற்றாது மூலைக்கு ஒருவராக ஓடி னார்கள். என் ஓட்டத்தை ஒருவரும் பிடிக்க முடி

யாது என்று ஓடினுன் உம்பர்வேந்தன். "எங்கே ஓடுகின்றீர்கள்?" என்று வினுவிக்கொண்டே ஓடினுர் நான்முகக் கடவுள்; நஞ்சின் அருகில் சென்ற திருமாலின் உடம்பு பஞ்சுபோல் பதைத்து கருமையாயிற்று. அவரும் ஓடி ஒளிந்தார்.

பின்னர் தேவர்கள் யாவரும் ஒருங்கு கூடித் திருக்கைலாய மலையையடைந்து, திரு நந்தி தேவ ரிடம் விடைபெற்றுக் கொண்டு, கண்ணுதற் கடவுளைக் கண்ணுரக் கண்டு கையாரத் தொழுது வாயாரத் துதி செய்து,

"பெருமானே! நாங்கள் அடிமைகள். தேவரீர் ஆண்டவன். எங்கட்கு நீரே தலைவர். அடிமை களாகிய நாங்கள் பாற்கடல் கடைதல் என்ற விவ சாயத்தைச் செய்தோம். அதில் முதலில் விளைந்த விளைவு தேவரீருக்கு உரியது" என்று விநயமாக விளம்பி நின்ருர்கள்.

தேவாதி தேவராகிய சிவபெருமான் அந்தக் கொடிய விடத்தைச் சுருக்கி எடுத்துத் தமது கண் டத்தில் அடக்கி எல்லோருடைய கண்டங்களையும் மாற்றினுர். இயமனை உதைத்த அப்பெருமா னுடைய திருவடி தேவர்கட்கு திருவருள் புரிந்தது.

இவ்வாறு தேவர் மனிதர் முதலிய அனைவர்க் கும் நஞ்சினை யுண்டு வாழ்வு அளித்த நமனை யுதைத்த நம்பிரானுகிய நம்பனைப் பரமன் என்று கருதாமல் வேறு ஒரு தலைவன் உண்டு என்று நவில்வதற்கு யார் நடுங்கவில்லையோ அவர்களைக் கண்டு ஞானிகள் நடுங்குகின்ருர்கள். சிவமூர்த் தியை யன்றி மற்றுமொரு மூர்த்தியைப் பரம் என்று கூற நடுங்காரைக் கண்டு ஞானிகள் நடுங்குகின்ருர்கள்.

இதோ பாருங்கள் இந்தக் கருத்துடைய அரிய அமுதப் பாடலை,

அடுங்காலம் இதுஎன்ன விடம் எழலும்
நனிவெருவி அயன்மா லேஞேர்
கொடுங்காலன் றனைக்குமைத்த குரைகழற்கீழ்
சரண்புகுதக் கொதித்து வாழ்நாள்
பிடுங்காமல் அருள்புரிந்த பிரான் அன்றிப்
பின்னையும்ஓர் பிரான் உண்டு என்ன
நடுங்காதார் தமைக்காணப் பெற்றிடினும்
என்னுள்ளம் நடுங்கும் மாதோ

—காஞ்சிபுராணம்.

புற்றில் வாளரவும் அஞ்சேன்
பொய்யர்தம் மெய்யும் அஞ்சேன்
கற்றைவார் சடையெம் மண்ணல்
கண்ணுதல் பாதம் நண்ணி
மற்றுமோர் தெய்வந் தன்னை
உண்டென நினைந்தெம் பெம்மாற்
கற்றிலா தவரைக் கண்டால்
அம்மநாம் அஞ்சுமாறே.

—திருவாசகம்.

# மூளும் வினை

உயிர்களாகிய நாம் செய்த வினை, தீ சிறிது சிறிதாகக் கனைந்து பெருகி மூண்டு எரிந்து துன்பஞ் செய்வது போல் மூண்டு நம்மைத் துன் புறுத்தும்.

அதனால் வினைக்கு மூளும் வினை என்று ஒரு பேரும் உண்டு. செங்கல் சூளை மூண்டெரிவது போல் வினை மூண்டெரியும்.

"மூளும் வினைசேர"

என்கிறார் அருணகிரிநாதர்.

"முன்செய்த தீவினையோ
இங்ஙனே வந்து மூண்டதுவே"

என்கிறார் பட்டினத்தார்.

நோயெல்லாம் நோய் செய்தார் மேலவாம்
நோய் செய்யார், நோயின்மை வேண்டுபவர்
—திருக்குறள்

இந்த வகையில் சாமானிய உயிர்கட்குச் செய்த துன்பம் மறுபிறப்பில் வந்து எய்தும்.

சிறந்த சிவஞானிகட்குச் செய்த வினை அப் பிறப்பிலேயே மூளும் என வுணர்க.

கோசல நாட்டை யாண்ட தசரதன் என்ற மன்னன் ஒருநாள் தன் பரிசனர் சூழ யானை வேட் டையாடச் சென்றான்.

பகலில் யானைகள் கிடைக்கவில்லை. இரவில் நீர் பருகும்போது யானைகளைக் கொல்லுமாறு கருதி, ஒரு நதித் துறையில், ஒரு புதரில் மறைந்து, "சப்தவேதி" என்ற கணையை வில்லில் தொடுத்து நின்றான்.

காசிபன் மகன் விருத்தசேனன், விருத்தசேன னுடைய மகன் சலபோசனன்.

சலபோசன முனிவரும் அவர் மனைவியும், கண்ணில்லாதவர்கள். அவர்களுடைய மைந்தன் சுரோசனன்.

தாய் தந்தையரைக் காவடியாகச் சுமந்து வந்தான். தாய் தந்தையர் நீர்வேண்டினார்கள்.ஒரு மணல்மேட்டில் அவரை அமர்த்தி சிறு வாயுள்ள கமண்டலத்தை நதியில் அமுத்தினான். குறுகிய வாயில் நீர் 'குடகுட' என்ற ஒலியுடன் சென்றது.

அவ்வொலியைக் கேட்ட தசரதன் யானை நீர் பருகுவதாக நினைத்துப் பாணத்தை யெய்தான்; அக்கணை சுரோசனன் மார்பில் பட்டது. "சிவா, சிவா" என்று அலறி நிலத்தில் வீழ்ந்தான்.

இளம்பாலகனுடைய அழுகுரலைக் கேட்ட மன்னன் திடுக்கிட்டான்; 'அந்தோ! கெட்டேன்' என்று கூறி வில்லை எறிந்துவிட்டு ஓடி அச் சிறுவனை எடுத்து மார்மீது அணைத்து, முகத்தில் நீர் தெளித்து, ஆடையினால் விசிறி உபசரித்தான்.

சுரோசனன்மெல்லக்கண்விழித்து "ஐயா! கண்ணில்லாத தாய் தந்தையர்க்குத் தண்ணீர் எடுக்க வந்த என்னை யாரோ ஒரு பாவி பாணம் எய்து கொன்றான். உயிர்பிரியும்போது தாய்போல் தண்ணளியுடன் ஆதரவு புரியும் தாங்கள் யார்?" என்று தழுதழுத்த குரலில் ஈனசுரத்துடன் கேட்டான்.

அச்சிறுவனது துயரத்தைக் கண்ணுற்ற தயரதனது கண்கள் நீர் பொழிந்தன. உள்ளந் துடித்தது.

"மைந்தா! நான் அயோத்திமன்னன் தயரதன். யானை வேட்டையாடவந்தேன். பகலில்யானைகள் கிடைக்கவில்லை. இரவில் நதியில் நீர் குடிக்க வரும் என்று கருதிப் புதரில் மறைந்து வில்லில் கணைதொடுத்து நின்றேன். நான் தண்ணீர் முகந்த போது உண்டான ஒலியை யானை என்று மாறி யுணர்ந்து கணையைவிட்டேன். அறியாமல் நேர்ந்த பிழை. என்னை மன்னிக்கவேண்டும்" என்ருன்.

"வேந்தே! என் வினை என்னைக் கொன்றது; தங்களை யான் நோவமாட்டேன். கண்ணற்ற பிதா மாதாக்களை நினைந்து வருந்துகின்றேன்."

"குழந்தாய்! உன் பிதாமாதாக்களைக் கண்ணை இமைகாப்பதுபோல் நான் காத்தருளுவேன். நீ வருந்தற்க."

'சிவ சிவ' என்று அம் மைந்தன் வாய் முணு முணுத்தது. ஆவி பிரிந்தது.

தயரதன் கமண்டல நீரை எடுத்துக்கொண்டு, சுரோசனனுடைய அடிச்சுவட்டைப் பின்பற்றிக் கொண்டு சலபோசன முனிவர் இருக்குமிடம் போய் வணங்கினுன்.

"மகனே! ஏன் இத்தனை நேரம்?"

"தபோதனரே! அடியேன்தயரதன். அயோத் தியை ஆள்பவன். யானைவேட்டையாட வந்தேன். இரவில் நதித்துறையில் நீர்பருகும்போதுகொல்ல லாம் என்று பதுங்கியிருந்தேன். தாங்கள் திருக் குமாரர் நீர் முகர்வதைக்கேட்டுயானையெனக்கணை விட்டுவிட்டேன்; அறியாமல் நிகழ்ந்த இந்தப்

பெரும் பிழையை மன்னித்தருள வேண்டும். தங்கள் தவப்புதல்வர் வானுலகம் போந்தார், கருணைக் கடலே! என்னைப் பொருத்தருளும்."

முனிவர் 'அந்தோ' என்று அலறினர். மன்னன் காலடியாக அவர்களைச் சுமந்து மகனுடைய உடலின் அருகில் விடுத்தான். மகனுடைய உடம்பைத் தடவித் தடவிப் பெரிதும் புலம்பி யழுதார்கள். "மகனே! இன்றுதான் எங்கள் கண் போயிற்று. எங்களை இரவு பகலாகக் காத்து உதவினயே. கண்மணி! இனி எப்பிறப்பில் உன்னைக் காண்போம்? ஆ! ஆ! எங்களை விடுத்துச் சென்றனையே!

"அரசனே! நாங்கள் அந்தணர். உன்னைச் சீறுவதில் பயன் யாது? சிலகாலம் சென்ருல் உமக்கு நான்கு புதல்வர்கள் பிறப்பார்கள். எந்தப் புதல்வன் மீது அதிகப் பிரியங் கொண்டிருக்கின்ருயோ, அப்பிரிய மகன் பிரிய நின் உயிர் பிரியும். புத்திர சோகத்தை அப்போது நீ நுகர்வாய்" என்றுகூறி முனிவரும் முனிவருடைய மனைவியும் விண்ணுலகெய்தினர்கள்.

அதுகண்டு மன்னன் தாங்கமுடியாதவேதனை யடைந்தான்.

நெடுங்காலத்துக்குப்பின் ராமர், பரதர், லட்சுமணர், சத்ருக்னர் என்ற புதல்வர்களைப் பெற்ருன்.

ராமர் பிரிவினுல் பெருந்துயருற்று மாண்டான். வினை மூண்டது.

பாண்டு மன்னன், தன் மனைவியர்கள் குந்தியுடனும் மாத்திரியுடனும் வேட்டையாடச் சென்ருன்.

மனைவியுடன் வேட்டையாடிக்கொண்டிருந்த அவன் மட்டற்ற மகிழ்ச்சியால் மயங்கியிருந் தான்.

கிந்தம முனிவர் தன் மனைவியுடன் பொருந்த விரும்பி மான் உருவம் எடுத்துப் பொருந்திக் கொண்டிருந்தார்.

பாண்டு மான்மீது கணை தொடுத்தான். மானின் மார்பில் கணை பட்டது. மிகப் பெருந் துன்பமுற்று மான் வடிவத்தை விடுத்து முனிவர் உருவங்கொண்டு, "ஏ பாண்டு மன்னனே! நீ வேட்டையறத்தை விடுத்தனை. அறத்தினைக் கெடுத்தனை. இளங்குழவியான விலங்குகளையும், புணர்கின்ற விலங்குகளையும், கிழப் பருவமுள்ள விலங்குகளையும், நோய்வாய்ப்பட்ட மிருகங்களை யும் கொல்லக்கூடாது என்பது வேட்டையறம்; இதனை மறந்த நீ என் மனைவியுடன் நான் மான் உருவங்கொண்டு இன்புறலானேன்; என்னை வீணாக அம்பு விட்டுக் கொன்றாய். நீ உன் மனைவி யுடன் இன்புறுங்கால் உன் உயிர் பிரியும்" என்று கூறி மாண்டார். மனைவியாருடைய ஆவியும் பிரிந்தது.

பாண்டு நடுங்கி ஒடுங்கி அஞ்சினான்; அவ னுடைய வாழ்வின்சிகரம் இடிந்தது; தன்னுடைய ஆடம்பரமான அணிகலன்கள் ஆடைகளைக் களைந்து தன் பரிசனர்களிடம் தந்து நகருக்கு அனுப்பினான்.

பாண்டுவின் துறவை யறிந்து திருதராஷ் டிரன் முதலியோர் வருந்தினார்கள்.

பாண்டு முனிவனாக ஆனான். அவனுடைய மனைவியரும் துறவுக்கோலம் பூண்டு அவனு டைய தவநிலைக்கு உதவிசெய்தார்கள்; அவன்

ஒரு மரத்தடியில் நிற்பான்; பால் கறக்கும் நேரம் நிற்பான்; தானே கனி உதிர்ந்தால் உண்பான்; இல்லையேல் அடுத்த மரத்தடியில் நிற்பான்; இப்படி எட்டு மரங்களிடம் போவான். எட்டு மரங்களிலும் கனி உதிரவில்லையானால் ஒன்பதாவது மரத்திடம் போகமாட்டான்; எட்டுக்கவளம் உண்பான்; ஒருவேளை உண்பான். அவனுடைய மனம் பற்றற்று நின்றது.

புறப்பகையை வென்ற அவன் அகப்பகையையும் வென்றான். பின்னர் தேவானுக்கிரகத்தினால் குந்திக்கும் மாத்திரிக்கும் ஐந்து மைந்தர்கள் பிறந்தார்கள். தருமர் பிறந்த, பதினாறுவது ஆண்டில் விதி வயப்பட்டு அவன் ஒருநாள் மாத்திரியை மருவினான். அந்தக் கணமே மாண்டான்; வினை மூண்டுவிட்டது.

இராமதாசர் என்ற சிறந்த திருமாலடியார் பன்னிரு வருடங்கள் சிறையில் இருந்து வேதனையுற்றார்; ஏன்? முற்பிறப்பில் ஒரு கிளியைப்பற்றி சிறகை யரிந்து பன்னிரண்டு நாட்கள் கூட்டில் அடைத்து வைத்தார்; அவ்வினை மூண்டு மறு பிறப்பில் பன்னிரு ஆண்டுகள் சிறைத் துன்பம் உற்றார். ஆதலால் அவரவர் செய்த வினை அவரவரைச் சாரும்.

செய்வினை மூண்டு உரிய காலத்தில் திருவருள் நெறிப்படி செய்தவனை யடையும்; இது தான் நியதி;

ஆதலால் ஒவ்வொருவரும் மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் யாருக்கும் எந்த இடரும் புரியக்கூடாது.

# பூஜை

நினைக்கும் தன்மையுடையவன் மனிதன். நினைவை வெளிப்படுத்துங் கருவி வாய்; உணவுகளை அருந்துகின்ற வாய்க்குப் பெருமை கிடையாது. வாயிருந்தும் விலங்குகளை வாயில்லாத பிராணிகள் என்று கூறுகின்றோம். கருத்துக்களை வெளிப்படுத்தி வசனிக்கும் வாயை உடையவன் மனிதன்.

இந்த உடம்பும் வாக்கும் நமக்குத் தந்தவன் இறைவன். இவைகள் தாமே வந்து அமைவதில்லை. நாமேயும் எடுத்துக் கொள்வதில்லை.

> ''வாழ்த்த வாயும் நினைக்க மட நெஞ்சும்
> தாழ்த்த சென்னியுந் தந்த தலைவன்''

என்கின்றார் அப்பர்.

எனவே, நினைக்க நெஞ்சையும், வசனிக்க வாயையும், இந்த இரண்டையும் தாங்கி நின்று தொழிற்படுகின்ற உடம்பையும் தந்த இறைவனை நாம் ஒவ்வொருவரும் நன்றி மறவாமையின் பொருட்டு பூவும் நீரும் கொண்டு பூஜை செய்ய வேண்டும்.

பூ—பூர்த்தி—ஜா—உண்டாக்குவது. மலமாயா கன்மங்களைப் பூர்த்தி செய்து, சிவஞானத்தை

யுண்டாக்கும் புனிதமான செயல் பூஜா எனப் படும். பூஜா என்ற சொல் பூஜை என வந்தது.

பூஜைக்கு முக்கியமான சாதனங்கள் பூவும் நீருமாகும்.

''புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணலு மதுகண்டு அருள் செய்யா நிற்கும்''

நல்லமலர்களைக் கொண்டு இறைவனை நாள் தோறும் அர்ச்சனை செய்யவேண்டும். அதுவே மெய்யும் கையும் பெற்றதற்குப் பயனாகும்.

உலகில் செல்வமும் சீரும் படைத்துச் சிறப் பாக வாழ்கின்ற ஒருவனைக் கண்டபோது, ''இவர் முற்பிறப்பில் நல்ல பூ வெடுத்துப் பூசை செய் தவர்'' என்று இன்றும் கூறுவார்கள்.

தண்ணீரையே சிவலிங்கமாகத் திரட்டி அம்பிகை பூசித்த திருத்தலம் திருவானைக்கா.

விநாயகர் சிவபூசை செய்த திருத்தலம் திருச்செங்காட்டங்குடி. அதனால் அது கண பதீச்சுரம் எனப் பேர் பெற்றது.

சூரசங்காரத்தின்பொருட்டு முருகவேள் படை கள் சூழப் போம் வழியில் மண்ணியாற்றங் கரை யில் சிவபூஜை செய்த இடம் திருச்சேய்ஞலூர்.

சூரசங்காரம் புரிந்து திரும்பியபோது தென் கடற்கரையில் ஐந்து சிவலிங்கங்கள் வைத்து முருகவேள் பூசித்தனர். அர்ச்சனை செய்யும் போது அமரர் வேண்ட, கையில் உள்ள மலரு டன் திரும்பிக் காட்சி கொடுத்த கோலந்தான் திருச்செந்தூர் முருகன் திருவுருவம். இன்றும் செந்திலாண்டவன் பின்புறம் ஐந்து சிவலிங்கங் கள் இருக்கின்றன. ஆராதனை செய்யும்போது

பின்புறம் கொண்டுபோய் ஆராதிக்கின்றதை இன்றும் திருச்செந்தூரில் காணலாம்.

இப்படி முருகன் வழிபட்ட திருத்தலங்கள் திருமுருகன் பூண்டி, வயலூர் முதலியன பல.

சக்கரம் பெறும்பொருட்டுத் திருமால் நாள் தோறும் ஆயிரந் தாமரை மலர்களால் அர்ச்சித்தனர். அதுவே திருவீழிமிழலை. பிரமதேவர் பூசித்த திருத்தலம் பிரமபுரம். இந்திரன் பூசித்த திருத்தலம கண்ணார்கோயில்.

நண்டு பூசித்தது; சிலந்தி பூசித்தது; பாம்பு பூசித்தது; குரங்கு பூசித்தது; அணில் பூசித்தது; காகம் பூசித்தது (குரங்கணிமுட்டம்)

பெரிய உருவமுள்ளது யானை; சிறிய உருவமுள்ளது எறும்பு. எறும்பு முதல் யானை யீருக என்று கூறுவர். திருச்சிராப்பள்ளிக்கு அருகில் உள்ள திருஎறும்பூர், எறும்பு பூசித்ததிருத்தலம். யானை பூசித்த திருத்தலம் திருவானைக்கா.

எறும்பும் யானையும் பூசித்த இந்தத் தலங்களைக் கண்கூடாகக் கண்டு மனிதர்கள் இறைவனைப் பூசிக்காமல் உண்டு உடுத்து உலாவி வீணே காலங் கழித்துக் காலன்வாய்ப்படுகின்றனர்.

இவர்களைக் கண்டு வருந்தி அதிவீரராம பாண்டியர் பாடுகிறார்.

*"சிவகருமஞ் செய்யார் திருநீறு சாத்தார்*
*தவநிலையாஞ் சைவநெறி சாரார்—அவனிதனில்*
*கான்பரந்த பச்சைக் களாநிழலைக் கைதொழார்*
*ஏன் பிறந்தார் மானிடராய் இன்று."*

இறைவனைப் பூசிக்காத புல்லர்களை மனிதர்கள் என்று கூறக் கூடாது. அவன் தந்த

கையால் அவனை வழிபட மறுத்தால் நன்றி கொன்ற பாவம் விடாதுதானே.

எறும்புகடை யானைதலை ஈசனைப் பூசித்துப்
பெறுங்கதிகண் டுந்தேறுர் பேய்கள்—அறிந்த
உலகத்தார் உண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையாய் வைக்கப் படும்.

—முதுமொழிமேல் வைப்பு

கண்ணபிரான் மகப்பேறுவேண்டி சிவபூஜை செய்தனர். அதனுல் பிறந்த மகனுக்கு சாம்ப வான் என்று பேரிட்டனர்.

அர்ச்சுனன் சதா சிவபூஜை செய்தனன் சிலர் கேட்கின்றுர்கள்: "எங்கள் வீட்டில் யாராவது இறந்துவிட்டால் அப்போது பூஜை செய்ய லாமா?" என்பார்கள். அர்ச்சுனன் தன் மகன் அபிமன்யு மாண்ட அன்றிரவு சிவபூஜை செய் தான் என்று மகாபாரதம் பேசுகின்றது.

முன்னே செய்த பூஜையின் பயன் இப்போது வந்து உதவுகின்றது. இப்போது பூஜை செய் தால் மறுமைக்கு வந்து உதவும். முன்னே செய்த விளைவு, இப்போது உணவுக்கு வருவது போல் என வுணர்க. "தொலினே ஜேஸின பூஜா பலமு" என்று தியாகையர் பாடுகின்றுர்.

பழங்காலத்தில் வசிட்டர் பராசரர் முதலிய மகரிஷிகள் அனைவரும் சிவலிங்கம் அமைத்துப் பூசித்தார்கள். அந்த ஆலயங்கள் ஆங்காங்கு இன்றுங் காட்சி தருகின்றன.

அரசர்கள் சிவலிங்கம் அமைத்துப் பூசித்தார் கள். 'இறைவனைப் பூவும் நீரும் கொண்டு பூசிப்பவர் திருக்கைலாய மலைக்குத் தடையின் றிச் செல்வார்கள். அவர்கள் பின்னே மெல்ல

நானும் போய்விடுவேன்' எனகின்ருர் அப்ப மூர்த்திகள்.

'போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்'

பிறவியில் இழிந்தது நாய்ப் பிறவி யென்பார்கள். நாயிற் கடையேன் என்பார்கள். இத்தகைய இழிந்த நாய்ப் பிறவி எனக்கு வேண்டும் என்று விரும்புகின்ருர் ஓர் அன்பர். அந்த நாய்ப் பிறவி எப்படி யமைய வேண்டும்? கடை வீதி சுற்றும் அங்காடி நாய்ப் பிறவி யன்று. "தினந் தோறும் சிவபூசை செய்து உணவு அருந்தும் அடியார்கள் உண்ட எச்சில் இலையில் உள்ள சேடத்தை யுண்ணும் நாயாய்ப் பிறக்கவேண்டும்" என்கின்ருர். இது எதனைக் குறிக்கின்றது? சிவ பூஜையின் சிறப்பைத் தெரிவிக்கின்றது.

"ஈயாப் பெரும்புல்லர்க்கே இதஞ் சொல்லியிரந் துழல்வேன்
மாயாப் பிறவியறுக்கும் சிவபெரு மான்பதம் என்று
ஓயாமல் பூசைசெய் துண்ணன்பர் சேடத்தை உண்ணும் ஒரு
நாயாய்ப் பிறந்திலனே அருணபுரி நாட்டினிலே."

அன்பர்கள் மறவாமல் மனத்தில் அமைத்துக் கொள்ளவேண்டியகருத்துக்கள் இரண்டு. உயர்ந்த உண்மையானவை; அவையெவை? அறவழியில் செலவழித்த பொருள் நம்முடையவை. பூஜையில் செலவழித்த நேரம் நம்முடைய நேரம்.

எல்லா நலன்களும் சிவ பூஜையால் ஒருவனுக்குக் கைகூடும். எண்ணிய எண்ணங்கள் யாவும் ஒருங்கு எய்தும். அரிய கருமங்களையும் செய்து முடிக்கலாம். உடல் நலம் உளநலம் உணர்வு நலம் ஆகிய அரிய நலன்களும் விளையும்.

உமா தேவியார் இடப்பாகம் பெறுவதன் பொருட்டு இறைவனைக் கச்சியம்பதியில் வந்து

சிவபூஜை செய்தார் என்ற இனிய வரலாற்றை ஈண்டு சிந்தியுங்கள்.

''எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை யெனவுரைத் தருள
அண்ணலார் தமை அர்ச்சனை புரிய ஆதரித்தாள்
பெண்ணில் நல்லவ ளாயின் பெருந்தவக் கொழுந்து.''

மார்க்கண்டேய முனிவர் மறலியை வெல்ல வேண்டி திருக்கடவூரில் சிவபூஜை செய்தார் என்பது உலகறிந்த உண்மை. சிவமூர்த்தி அவர் செய்த சிவலிங்கத்தினின்றும் வெளிப் பட்டு மறலியை யுதைத்து என்றும் பதினறு ஆண்டாக வாழுமாறு மார்க்கண்டேயருக்கு அருள் புரிந்தார். இதைவிடச் சிவபூஜைக்கு மேலான சான்று என்ன வேண்டும்?

திருமால் வைகுந்தபதியாகத் திருமகளுடன் வாழ்கின்ற பெருவாழ்வும், பிரமதேவர் படைப் புத் தலைவராக நாமகளுடன் சத்தியவுலகில் தாமரைத்தவிசில் வீற்றிருக்கும் அரும்வாழ்வும், பொன்னுலகில் முப்பத்து முக்கோடித் தேவர்கள் புடை சூழ, ஐராவதம், உச்சைச்ரவம், காமதேனு, கற்பகமரம், சிந்தாமணி, சசிதேவி, அரம்பையர் கள் ஆகியவைகளுடன் வாழும் உயர்நலமும் சிவபூஜையால் கிடைத்தன என்பதை உணர்தல் வேண்டும்.

''வண்டுளறுந் தண்டுழாய் மாயோன் இறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தேள் இறுமாப்பும்
அண்டர்தொழ வாழுன் இறுமாப்பும் ஆலாலம்
ஆண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்.''

ஆகவே மனிதப் பிறப்பெடுத்த ஒவ்வொ வரும் இறைவனுடைய திருவடியைத் தங்கள் தகுதிக்குத் தக்க அளவில் அமைத்து நல்ல மலர்

களை அன்புடன் இட்டு உள்ளங் குழைந்து உரு கித் துதிசெய்து நாள்தோறும் பூசிக்கவேண்டும்.

பூஜைக்கு இரு தகுதிகள் வேண்டும். ஒன்று அன்பு, ஒன்று ஆசாரம்.

உம்பர்கள் ஸ்வாமிநமோநம எம்பெருமானே நமோநம
ஒண்டொடி மோகா நமோநம எனநாளும்
உன்புகழே பாடிநானினி அன்புடன் ஆசாரபூஜைசெய்
துய்ந்திட வீணாள் படாதருள் புரிவாயே''

—திருப்புகழ்

## நன்மை செய்!

கடவுதல் என்றால் செலுத்துதல் என்று பொருள். உலகங்களையும் உயிர்களாகிய நம்மையும் செலுத்துகின்றபடியால் இறைவனுக்கு கடவுள் என்று பேர் ஏற்பட்டது. நம்மையெல்லாம் செலுத்துகின்றவர் கடவுள். ஒரு வண்டியைச் செலுத்துகின்றவன் வண்டிக்குள் இருந்து செலுத்துவதுபோல் கடவுள் உயிருக்குயிராக இருந்துசெலுத்துகின்றார்.

கண்ணால் காணமாட்டாமையால் கடவுள் இல்லை என்று கூறக்கூடாது. இந்த உடம்பிலேயுள்ள உயிரை நாம் எப்போதாவது கண்ணால் கண்டதுண்டா? காண மாட்டாமையால் நாங்கள் உயிரில்லாதவர்கள் என்று கூறினால் உலகம் சிரிக்குமல்லவா? உடம்புக்குள் உயிரும் உயிருக்குள் இறையும் உறைகின்றன.

ஆகவே, கடவுள் உயிர்கள் தோறும் உறைகின்றார். ஒன்றாகி உடனாய் வேறாகியிருக்கின்றார். எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும். ஆதலால் எல்லா உயிர்கட்கும் நாம் நன்மையே செய்யவேண்டும். உயிர்களுக்குச் செய்யும் நன்மை கடவுள் வழிபாடாகும்.

உயிர்களுக்கு வருகின்ற இடர்களை முடிந்தவரை நீக்கியும், நன்மை புரிந்தும்மகிழவேண்டும். அதுவே அறிவு படைத்ததன் பயனுமாகும்.

"அறிவினா னாகுவதுண்டோ பிறிதின் நோய்
தன்னோய்போல் போற்றாக் கடை"

என்கின்றார் திருவள்ளுவர்.

இனி கடவுள் எங்குமிருக்கிறார் என்பதனையும் மறவாமல் கருத்தில் இருத்தல் வேண்டும்.

''பார்க்குமிட மெங்குமொரு நீக்கமற நிறைகின்ற
பரி பூரணானந்தமே''

என்கின்றார் தாயுமானார். இந்த எண்ணம் இடையறாது உள்ளத்தில் நிலைபெற்றிருக்க வேண்டும். ஆண்டவன் நம் உள்ளத்தில் இருக்கின்றானாதலினாலும், நாம் செய்யும் தீமைகட்குத் தண்டனை தருவோன் அவனேயாதலினாலும் நாம் அவனையன்றிப் பிரிந்திருக்க முடியாமையினாலும் நாம் தீமைகளை நினையாமலும் சொல்லாமலும் செய்யாமலும் இருக்கவேண்டும். ஜீவசாட்சியாக இருந்து இறைவன் நம் எண்ணங்களையெல்லாம் அறிகின்றார். நாம் பேசும் பேச்சுக்களையெல்லாம் கேட்கின்றார். ஆதலினால் நாம் நல்லனவே நினைத்து நல்லனவே செய்யவேண்டும்.

இனி நாம் பிறர்க்குத் தீங்கு செய்வோமானால் அது நமக்கே தான் செய்கின்றோம் என்பதை மறந்துவிடக் கூடாது. பிறருக்குச் செய்யும் நன்மையும், தீமையும் நமக்குத் திரும்ப வருகின்றன.

'நன்மையுந் தீமையுந் தான்தர வருமே'. வினை அறிவில்லாத சடம். ஆதலினால் தானே வந்து நம்மைச் சாராது. நாமும் சிற்றறிவுடையோமாதலில் நாமும் செய்த வினையை அறிந்து அடைய வல்லோமல்லோம்; ஆதலின் முற்றறிவும், பேராற்றலும் படைத்த பரம்பொருளாகிய கடவுள் அவரவர்கள் செய்தவினைகளை அவரவர்கட்குக் காலம் இடமறிந்து ஊட்டுகின்றார்.

இனி நாம்செய்த நல்வினை தீவினை செய்த அளவே வரா. ஒன்று ஆயிரமாகப் பெருகிவரும். வயலில் இட்ட விதை ஒன்று பலவாக வருவது

போல், வினைகளும் பன் மடங்கு வளர்ந்துவரும்.

ஒரு முனிவருடைய ஆசிரமத்தில் வேறு ஒரு முனிவர் உணவு உண்டுகொண்டிருந்தார். அம் முனிவருடைய சின்னஞ் சிறு மகன் விளையாட்டாக முனிவருடைய உணவில் ஒரு சிறு கல்லை எறிந்தான். முனிவர் அதனை அறியாது உணவு அருந்தினர்.

பின்னர் முனிவரின் புதல்வர் சகல நூல்களையும் கற்று அரிய பெரிய தவஞ்செய்து மாதவசிகாமணியாக ஆனார். இவர் ஒரு முறை தற்செயலாக அறக் கடவுளுடைய உலகஞ்சென்றார். அங்கு ஒரு குன்றம் இருக்கக் கண்டார். "இது என்ன?" என்று அறக்கடவுளை வினவினார். "நீர் சிறுபிள்ளையாக இருந்தபோது ஒரு முனிவரது உணவில் எறிந்த கல் இங்கு வளர்ந்துகொண்டே யிருக்கின்றது. இதை நீர் இங்கு வந்து உண்ணுதல் வேண்டும்" என்றார்.

அதைக் கேட்ட முனிவர் நடுங்கிப் பூவுலகம் வந்து அக்குன்றுக்குச் சமமான ஒரு குன்றைப் பிளந்து சிறு துண்டுகளாக்கி அவற்றை இடித்துக் கரைத்து நாடோறுங் குடித்து முடித்தார். நரக உலகில் இருந்த குன்றம் கரைந்துவிட்டது. சிலையையே உணவாகக் கொண்டதனால் அவர் சிலாதனர் எனப்பட்டார். அவர் செய்த புத்திரகாமேஷ்டியாகத்தில் அவதரித்தவர் நந்தி தேவர். ஆகவே நாம் சிறுபாவங்களையும் செய்யக்கூடாது. எல்லா உயிர்களிலும் இறைவன் இருக்கின்றான் என்று எண்ணி உயிர்களுக்கு நன்மையே செய்து நலம் பெறவேண்டும்.

*"எவ்வுயிரும் என்னுயிர் போல் எண்ணி யிரங்கவுநின்*
*தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே"*

*—தாயுமானார்.*

# நன்றி மறவேல்

பீஷ்மர் சாதல்பத்தில் படுத்திருந்தபோது யுதிஷ்டிரர் முதலியவர்கள் கண்ணபிரானுடன் இருந்து அவரிடம் அநேக தர்மங்களைக் கேட்டார்கள். அப்பகுதி மகாபாரதத்தில் சாந்திபர்வம் எனப்படும். அது மனத்துக்குச் சாந்தியைத் தருவது.

பீஷ்மர் ராஜதர்மம், ஆபத் தர்மம், மோக்ஷ தர்மம் முதலிய அறம் பல இனிமையாக இயம்பினார். அவற்றுள் ஒன்று இது.

நன்றி மறந்தவன் அடையுங் கதியை இது நவில்கின்றது —

"பிதாமகரே! பெருந்தகவினரே! நன்றி மறந்தவன் நண்பரை வஞ்சிப்பவன், என்ன கதியடைவான்? அதனை எனக்குக் கூறவேண்டும்" என்று யுதிஷ்டிரர் வினவினார். பீஷ்மர் கூறுகின்றார்.

வடக்குத் திக்கில் மத்திய தேசத்தில் கௌதமன் என்ற பிராம்மணன் இருந்தான். அவன் கரிய உடம்பையுடையவன். வேதம் ஓதாதவன். பேராசையுடையவன். நல்லொழுக்கமில்லாதவன். திருடர்களின் கூட்டம் நிரம்பிய ஒரு கிராமத்திற்குச் சென்றான். அங்கு ஒரு திருடன் தன்னிடம் உள்ள பொருளைப் பலருக்குத் தானஞ் செய்தான். கௌதமன் என்ற அந்தப்பிராம்மணன்

அவன் வீட்டிற்குச் சென்று யாசித்தான். அத்திருடன் அவனுக்கு ஓராண்டுக்கு வேண்டிய பொன்னும், ஒரு வீடும், இளம் பெண் ஒருத்தியையுந்தந்தான.

பிராம்மணன் அவளுடன்கூடி மகிழ்ச்சியுடன் வாழ்ந்தான். வேடர்களுக்கு இருப்பிடமான அவ் வூரில் வசிக்கும்பொழுது அடிக்கடி அருகில் உள்ள காட்டிற்குச் சென்று, கொக்கு, அன்னம், குருவி முதலிய பட்சிகளைக்கொன்று அவைகளைத் தின்று மகிழ்ந்தான். பாவம் என்றால் பாயசமாக இருந்தது. கொலை புலை நிரம்பிய அவன் மனம் இரும்பாக—கல்லாக—கெட்டியாக இருந்தது.

ஒருநாள், அந்தவூருக்கு ஒரு தூய வேதியர் வந்தார். அவர் மரவுரி உடுத்தியவர். கருணை நிரம் பியவர். வேதாத்யயனஞ் செய்தவர். அவர் அந்த வேடச்சேரியில் உணவு கிடைக்காதவராகிக் கௌதமன் வீட்டிற்குச் சென்றார். கௌதமன் தோளில் இறந்த அன்னபட்சிகளை வைத்துக் கொண்டு நின்றான். அவன் உடம்பு உதிரத்தால் நனைந்திருந்தது. குரூரமான பார்வையும், கொடிய செயலும், கடிய மனமும் படைத்த அவனைக் கண்டு வந்த அந்தணர் நாணமுற்றார்.

"கௌதமா! நீ என்ன மூடனாக இருக்கின்றனையே? அந்தணர் குலத்தில் பிறந்த நீ இப்படி சீர்குலைந்து நிற்கின்றனையே! உன் முன்னோர்கள் எல்லாம் சிறந்த வேத விற்பன்னர்கள் ஆயிற்றே. நல்ல குலத்தில் பிறந்த நீ குலத்தை விடுத்தனையே, பாவத்தை அடுத்தனையே, நீ நரகத்துக்குப் போக முயல்கின்றாய். ஆ! ஆ! உன்னைப் பார்ப்பதும் பாவம்" என்று கூறிவிட்டுச் சென்றார்.

கௌதமன் நாணமுற்றான். பின்னரும் அவன் மனம் பாவத்திலேயே சஞ்சரித்தது. பொருளில் விருப்பமுள்ளவனாகிப் புறப்பட்டான். பலப்பல இடங்களுக்குப் போனான். கடல் யாத்திரை செய்யும் வியாபாரிகளைக் கண்டான். அவர்களுடன் கூடிச் சென்றான். ஒருநாள் வழியில் மதம் பிடித்த யானை வந்து அவ்வியாபாரிகளில் பலரைக் கொன்றுவிட்டது. பிராம்மணன் எப்படியோ தப்பித்துக்கொண்டான். வட திசையை நோக்கி ஓடினான். ஒருவித உதவியுமின்றி பசிதாகத்தால் களைப்புற்று வாடினான்.

சிறந்த வனத்தை யடைந்தான். அவ் வனத்தில் எல்லா மரங்களில் எல்லாக் காலங்களிலும் பூத்திருந்தன. இந்திரனுடைய நந்தவனம் போல் அது காட்சியளித்தது. அரசு, ஆச்சா, அகில், மா, பனை, பலா, ஆல் முதலிய மரங்களும் சந்தன மரங்களும் நெருங்கியிருந்தன. அழகான அந்த வனத்தில் யட்சர்களும் கின்னரர்களும் இனிய கானம் புரிந்தார்கள். அங்கு நறுமணம் வீசிக்கொண்டிருந்தது. அழகிய பறவைகள் ஒலித்துக்கொண்டிருந்தன. மனிதனுடைய முகம் போன்ற முகத்தையுடைய பாருண்டம் என்ற புகழ் பெற்ற பறவைகள் மேலே பறந்து கொண்டிருந்தன. பொன்னிறமான மணல்கள் நிரம்பியுள்ளதும் அதிசயமுடையதுமான அவ்வனத்தைக் கண்டு சுவர்க்கத்தை யடைந்தவனைப்போல் அவன்மகிழ்ச்சியடைந்தான். மேடு பள்ளமில்லாத ஒரு பகுதியில் லட்சுமிதேவி வாசம் பண்ணுவதும் வானளாவி நிற்பதும் அமுதம் போன்ற நிழல் தருவதுமான ஓர் ஆலமரத்தைக் கண்டான். அம் மரம் குடைபோல் கவிழ்ந்திருந்தது. சந்தனத்தால் நனைந்தது போன்ற குளிர்ந்த இலைகளும், கண்ணைக் கவரக்கூடிய அழகிய மலர்

களும், தேவர்களுடைய வீடுகள் போன்றதுமான பல மரங்கள் அதைச் சூழ்ந்திருந்தன. உத்தமமான அம்மரத்தினடியில் கௌதமன் அமர்ந்தான். இனிய மணமுள்ள காற்று வீசியதினால் அவனுடைய களைப்பு நீங்கியது. அவன் அப்படியே படுத்து உறங்கிவிட்டான்.

கதிரவன் மேற்கடலில் முழுகினான். காசிபருடைய பிள்ளையும் அறிவுள்ளதும், பிரமதேவரிடம் தோழமை பூண்டதும் கொக்குகளுக்கு அரசும் ஆகிய ராஜதர்மன் என்ற உத்தமமான பறவை பிரமலோகஞ் சென்று பிரமதேவரிடம் அளவளாவிப் பேசிவிட்டுத் தன் இருப்பிடமாகிய அந்த ஆலமரத்திற்கு வந்தது. தேவகன்னிகையிடம் பிறந்ததும், நல்ல காந்தியுள்ளதும், அறிவு நிறைந்ததும் புகழ்படைத்ததும் ஆகிய அப்பறவை சூரியனுடைய ஒளி போன்ற உயர்ந்த அணிகலன்களை அணிந்திருந்தது. அப்பட்சியைக் கண்டு கௌதமன் அதிசயம் அடைந்தான். அதனைக் கொல்லவேண்டும் என்று கருதினான்.

பட்சி, "ஓ பிராம்மணரே! உமக்கு நல்வரவு. என்னுடைய வீட்டை யடைந்த உம்மை நான் உபசரிக்கும் கடமை பூண்டிருக்கிறேன். நீர் எனது அதிதி. உமக்கு வேண்டியவற்றை யெல்லாம் நான் தருவேன். பசியாலும் தாகத்தாலும் நீர் களைப்புற்றிருக்கின்றீர்" என்றது. அதனுடைய அழகையும் இனிய குரலையும் கனியமுதம் போன்ற குணத்தையும் பார்த்து அவன் ஆச்சர்யம் அடைந்தான்.

ராஜ தர்மன், "ஐயோ! நான் காசிபருடைய புத்திரன். தாட்சாயணி என்ற மகா பதிவிரதை என் தாய். பிறருக்கு உதவி செய்வதே என்னுடைய வேலை. உம்மைப் பார்த்தால் இரக்கம்

ஏற்படுகின்றது. நல்ல குணங்களை யுடையவராக நீர் காணப்படுகின்றீர்'' என்று கூறியது. பின்னும் சகால மரத்தின் நறுமலர்களைக் கொண்டு வந்து மெத்தைபோல் பரப்பி அதில் அவனை அமரச் செய்தது. கங்கா நதியில் வசிக்கும் மீன்களைக் கொணர்ந்து அவனுக்கு முன் குவித்தது. நெருப்பை மூட்டியது. உலர்ந்த சுள்ளிகளைக் கொணர்ந்து நெருப்பை அதிகப்படுத்தியது. ''ஐயா! உணவு செய்யும்'' என்று அன்புடன் கூறியது.

பிராம்மணன் மீன்களை நெருப்பில் சுட்டு உண்டு பசியாறினன். அவனுடைய களைப்பை மாற்றும்பொருட்டு ராஜதர்மன் தனது சிறகுகளை வீசியது. மலர்களை நிரம்பக் கொணர்ந்து பரப்பிப் படுக்கையமைத்து ''ஐயனே! இதில் சுகமாகப் படுத்துக் கொள்ளும்'' என்றது. அவன் அதில் ஆனந்தமாகப் படுத்துக் கொண்டான்.

அவன் அருகில் பறவை யமர்ந்து, உறவினரைப் போல உபசரித்து, ''தாங்கள் யார்? தங்கள் உறவினர் யார்? எங்கு வந்தீர்?'' என்று கேட்டது.

''நான் கௌதம கோத்திரத்திற் பிறந்தவன்; பிராம்மணன்; என் பேர் கௌதமன். மிகுந்த ஏழை. கப்பலில் சென்று பொருள் தேடலாம் என்று நினைத்து வந்தேன்'' என்றுன்.

ராஜதர்மன் என்ற பட்சி, ''ஐயா! நீர் வருந்த வேண்டா; நல்ல நண்பனையுடையவனுக்குத் துன்பம் வராது; உனக்கு நான் தக்க உதவிகளைச் செய்வேன். நிரம்பிய தனத்தை நீர் அடையும் உபாயத்தை உரைப்பேன். கவலையை விட்டு விடும். பொருளை அடையத்தக்க வழி நான்கு என்று வியாழ பகவான் கூறியிருக்கின்ருர்.

கல்வி, பொன், அறிவு, நண்பன் இந்த நான்கும் என அறிக, அன்பரே! நான் உமக்கு நண்பனுகின்றேன். உம்மைத்தனவந்தனுகச்செய்வேன். உமக்கு நிரம்பவும் பொருள் வரும் வழியைக் கூறுகின்றேன்; கவலையை விடும்" என்று இனியமொழி கூறியது.

அன்றிரவு சுகமே கழிந்தது. மறுநாள் காலை கொக்கரசன், "பிராம்மணரே! இரவு சுகமே கழிந்ததா? உடம்பு நலமாக இருக்கின்றதா? மனம் சாந்தியாக உளதா? இனி உமக்குப் பொன் வரும் வழியைச் சொல்லுவேன். இதோ இந்த வழியாகச் செல்லும்; இங்கிருந்து மூன்று யோசனை தூரம் சென்ருல் மனு விரஜம் என்ற நகரை யடைவாய். அசுரர்களுக்கு அதிபதியும் மகானுபாவனும் ஆன விருபாட்சன் என்ற புகழ் பெற்றவன் இருக்கின்ருன்; அவன் என்னுடைய நண்பன்; அவன் பரம உபகாரி. நீர் அவனிடம் செல்லும். இதோ இந்த என் உடம்பிலுள்ள பொன் போன்ற இறகைக் கொண்டுபோய்க் கொடுத்து என்னுடைய நண்பன் என்று கூறும்; அவன் உமக்கு நிரம்பவும் பொன்னும் மணியும் வழங்குவான்; சந்தேகமில்லை. உமக்கு நன்மையே வரும்; போய் வாரும்" என்று கூறியது.

"நல்லது" என்று கூறிக் கௌதமன் அமுதத்துக்கு ஒப்பான பழங்களைத் திருப்தியாக உண்டுவிட்டு ராஜதர்மாவிடம் விடைபெற்றுப் புறப்பட்டான்.

சந்தன மரங்களும் அதில் ஆச்சா முதலிய மரங்களும் நிரம்பிய வனத்தின் வழியே சுகமே நடந்தான். பின்னர் மனு விரஜம் என்ற பட்டினத்தை யடைந்தான். கடைக்காவலர்கள் சென்று அவன் வரவை விருபாட்சனிடம்தெரிவித்தார்கள்.

அவனை அவன் முறைப்படி மரியாதை செய்து வரவேற்ருன். கௌதமன் அந்நகரின் சிறப்பைக் கண்டு வியந்தான்.

விருபாட்சன் வேதியனை நல்ல பீடத்தின்மீது இருக்கச் செய்தான். பாதநீர் கொடுத்து பூஜித்தான். "நீர் என்ன கோத்திரம்? வேதங்களையெல்லாம் நன்கு அத்யயனம் செய்திருக்கின்றீரா? நீர் எங்கிருந்து வருகின்றீர்? உமக்கு நல்வரவு" என்று கூறினன்.

பிராம்மணன், "அன்பா! நான் மத்திய தேசத்தவன். வேடர்கள் வாழும் சேரியில் வாழ்கின்றேன். ஒரு வேடுவச்சி இரண்டாவது முறையாக என்னை மணந்து கொண்டாள். நான் வேதம் படிக்கவில்லை. வாடி வந்தேன். உனது நண்பனுகிய ராஜதர்மன் என்ற கொக்கு என்னை உன்பால் அனுப்பியது."

விருபாட்சன் இதைக் கேட்டு உள்ளத்தில் ஆலோசிக்கிருன். "இவன் வேதம் படியாத பதிதன். இழி குலத்தாளை மணந்தவன். இவன் எப்படி ராஜதர்மாவுக்கு நண்பனுனன். அப்பட்சி உத்தம குணமுடையது. எனக்கு உடன் பிறந்தானைப் போன்ற நட்புடையது. அதன் விருப்பத்துக்காகவாவது இவனுக்கு நான் உதவி செய்ய வேண்டும். நாளை கார்த்திகை மாதம் பௌர்ணமி. ஆயிரம் வேதியர்கள் நாளை என் அரண்மனையில் போஜனஞ் செய்வார்கள். அவர்களுடன் இவனும் உபசாரம் பெறட்டும்" என்று தனக்குள் சிந்தித்தான்.

மறுநாள் ஆயிரம் பிராமணர்கள் வந்தார்கள். அவர்களுடன் கௌதமனும் சேர்ந்துகொண்டான். எல்லோரும் சந்தனம் பூசிக்கொண்டார்கள்; மாலை சூட்டி அவர்களை நன்கு உபசரித்தான். விருபாட்

சன். அவர்களைச் சிறந்த அதிதிகள் என்று கருதி தங்கப்பாத்திரங்களில் பாலும் தேனும் நெய்யும நிறைத்து தானம் பண்ணினன். அவன் இவ்வாறு ஆஷாடமாதப் பூரணையிலும் மாக மாதப் பூரணை யிலும் பிராம்மண அதிதிகளை வரவழைத்து மிக்க பய பக்தியுடன் வழிபட்டுத் தானதருமங்களைச் செய்வான்.

அத்தனை அந்தணர்களுக்கும் பொன்னும் நவரத்தினங்களும் தட்சிணைகளாகத் தந்தான். கம்பளங்கள், பொன்னுடைகள், வைர வைடூரியங் கள் இழைத்த தங்கப்பாத்திரங்களை வழங்கினன். "உங்களுக்கு வந்தனம். நீங்கள் சுகமே போய் வாருங்கள்" என்று விடை கொடுத்தான். பிராம மணர்கள் தங்களுக்குத் தந்த தங்கப்பாத்திரங் களையும் நவமணிகளையும் ஆடை அணிகலன்களை யுஞ் சுமந்துகொண்டு அவனை வாழ்த்தி விட்டுச் சென்றனர்கள்.

கௌதமனும் மிக்க மகிழ்ச்சியுடன், தனக்குத் தந்த தங்கப்பாத்திரங்கள், பொன், ஆடைகள், நவரத்தினங்களையும் சுமந்துகொண்டு புறப் பட்டான். விரைவாக ஆலமரத்தை யடைந்தான். ராஜதர்மா பசிதாகத்துடன் களைத்து வந்த அவனை அன்புடன் வரவேற்றது. சிறகால் வீசிக் காற்றை யுண்டாக்கி அவனுடைய களைப்பை மாற் றியது.

"அன்பரே! நீர் சுகமே சென்று விரூபாட் சனைக் கண்டீரா? என் நண்பனகிய அவன் உம் மைத் தக்கபடி உபசரித்தானு?"

"நிரம்பப் பொன்னும் மணியுந் தந்தான். உன் நண்பன் என்ற வகையினல் நல்ல மாதிரி என்னை வரவேற்று அன்புசெய்தான். ஒரு குறையுமில்லை" என்ருன்.

கொக்கு நல்ல இனிய கனிகளைக் கொணர்ந்து தந்து பசியாறச் செய்தது. மலர்களைப் பரப்பியது. கௌதமன் அதன்மீது படுத்தான். ராஜதர்மா என்ற அந்தக் கொக்கும் மிக்க அன்புடன் அவன் அருகில் படுத்து உறங்கியது.

'நான் நாளை காலை இந்தப் பொன் முதலியவைகளைச் சுமந்துகொண்டு நடந்துபோகவேண்டும். நெடுந்தூரம் உளது. வழியில உணவு கிடைப்பது அரிது. ஆதலால் நிரம்பவும் பருத்திருக்கின்ற இந்தக் கொக்கைக் கொன்று எடுத்துக் கொண்டால் வழிக்கு உணவாக உதவும்' என்று நன்றி கெட்ட அப்பாதகன் ஆலோசித்தான்.

தன் அருகில் நம்பி உறங்கிக் கொண்டிருந்த அந்த அன்புள்ள பட்சியை, அருகில் எரிந்து கொண்டிருந்த ஒரு கொள்ளிக் கட்டையை எடுத்துக் கொன்று விட்டான். அவன் மனத்தில் சிறிதாவது கருணையில்லை. அப் பறவையைத் தீயினால் சுட்டுப் பக்குவம் பண்ணினான். அதை ஒரு தோளில் வைத்துக்கொண்டு பொன் குவியலை எடுத்துக்கொண்டு வேகமாகப் புறப்பட்டான்.

விருபாட்சன் என்ற அசுர மன்னன் வழக்கம்போல் தனது நண்பனாகிய தாட்சாயணியின் பிள்ளை ராஜதர்மன் வராமலிருப்பது பற்றி வருந்தினான். அதற்கு ஏதாவது வந்துவிட்டதோ என்று துக்கப்பட்டான். தன் புதல்வனைப் பார்த்து "மகனே! எனது நண்பனாகிய ராஜதர்மனைக் காணேன். அது எப்பொழுதும் முதல் சந்தியில் பிரமதேவரை வணங்கிச் செல்லும். சென்று திரும்பும்போது என்னைப் பார்த்துவிட்டுத்தான் போகும். அது வராமையால் என் மனம் வருந்துகின்றது. புத்தி கலங்குகின்றது. ஒரு வேளை அத

மனுன பிராம்மணனால் அதற்கு ஆபத்து வந்தி ருக்கக் கூடும். நீ சென்று அதன் நலத்தை யறிந்து வா'' என்றான்.

அம்மைந்தன் பல அசுரர்கள் சூழப் புறப்பட் டான். ஆலமரத்தினிடம் வந்தான். ராஜதர்மா வின் இறகுகள் சிதறுண்டு கிடப்பதையும் அதன் உதிரத்தால், பூமி நனைந்திருப்பதனையுங் கண் டான். 'அந்தோ!' என்று கூவி யழுதான். அந்தப் பாவியை விடக்கூடாது என்று எண்ணி அசுரர் களுடன் வேகமாக ஓடினான். வழியில் கௌத மனைப் பிடித்து. ''சண்டாளா? நன்றி மறந்த நாயே! உனக்கு நற்கதி கிடைக்குமா? நீ பிராம் மணனா? உண்ட வீட்டிற்கு இரண்டகஞ் செய்த வனே! அறிவில்லாத அதமனே'' என்று வைது, அவனைப் பிடித்துக்கொண்டு தந்தையிடம் காட் டினான்.

விருபாட்சன் ''இப்பாதகனைக் கொல்லுங்கள் இவனுக்கு என் நண்பன் எந்த எந்த வகையில் உதவி செய்தான்.

''ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடைமுறை
தான்சாந் துயரந் தரும்''

என்றபடி கொடியவர்களுடைய கூட்டுறவால் மடிய நேர்ந்தது. இவனைக் கண்டம் கண்டமாக வெட்டுங்கள்'' என்றான்.

உடனே அசுரர்கள் கத்தியெடுத்துத் துண் டித்தார்கள். விருபாட்சன் ''நன்றிகெட்ட இப் பாதகனை நான் தின்னமாட்டேன். இவன் உடம்பை வேலைக்காரர்களிடம் கொடுங்கள்'' என்றான்.

வேலைக்காரர்களும் பிற அசுரர்களும் நன்றி மறந்த அவனைத் தின்ன மறுத்துவிட்டார்கள். அவனுடைய மாமிசத்தை நாய் நரிகளிடம் இட்டார்கள். நாய் நரிகள் முதலிய கொடிய விலங்குகளும் மோந்து பார்த்துவிட்டு அருந்தாமல் ஓடி விட்டன.

உலகில் குருதாரகமனம் களவு கொலை புலை முதலிய பாவங்களைச் செய்தவர்கட்குக் கழுவாயுண்டு. நன்றி மறந்தவருக்கும் நண்பரை ஏமாற்றியவருக்கும் கழுவாய் கிடையாது.

விருபாட்சன் ராஜதர்மா என்ற கொக்கை சந்தனக கட்டைகளின் மீது தகனஞ் செய்தான். அப்போது இந்திரன் வந்து அமிர்தத்தால் நனைத்தான். கொக்கு உயிர் பெற்று எழுந்து இந்திரனைக் கண்டு வணங்கி, "என் அன்புள்ள நண்பன் கௌதமன் எங்கே? அவன் இன்றி நான் வாழமாட்டேன்" என்று நவின்றது.

அதனுடைய இனிய சொல்லுக்காக இந்திரன் கௌதமனைப் பிழைப்பித்தான். கௌதமன் மிக்க நாணத்துடன் தன் மூட்டையைச் சுமந்து வேடச் சேரிக்குச் சென்று சில காலம் வாழ்ந்து நரகத்தை யடைந்தான்.



ஆதலால் நண்பர்களுக்குத் தீங்கு செய்யக் கூடாது. நன்றி மறக்கக் கூடாது. நன்றி மறந்தவனும் நட்புகெட்டவனும் கொடியநரகினை யடைவான்.

ஒருவனுக்குத் தன லாபம் மித்திர லாபம் இந்த இரண்டினும் மித்திர லாபமே சிறந்தது என்று பீஷ்மர் தருமருக்குக் கூறினர்.

